கடவதோ? என்ன,—ஆரேனுமாக சரணாகதரை ரக்ஷிக்கக்கடவதென்கிற விசேஷ சாஸ்த்ரம் உன்னைத்தொற்றிக் கிழித்துப் போகடக்கடவதோ என்கிறான். "சரணம்" என்று வந்த ஸ்ரீவிபீஷணாழ்வான் தோஷவானேயாகிலும் *நத்யஜேயம்* என்று பெருமாள் கடற்கரையிற் சொன்னவார்த்தை கடலோசையாகக் கடவதோ? என்கிறான். *ப்லவங்கம* - பின்னையும் இவன் புத்தி திரியவிடாமையினாலே ஹரி! ஹரி! என்கிறான். 'ப்லவங்கம்' என்கிறான் - நச்சினத்தை நச்சும் ஜாதியானமை கண்டோமே யென்கிறான். வஸிஷ்டாதிகள் மந்த்ரிக்குங் குடியான இக்ஷ்வாகுவம்சத்தில் பிறந்தாயல்லை; யோகிகளான ஜநககுலத்தில் பிறந்தாயல்லை; காட்டிலே பணையோடு பணை தத்தித்திரிகிற ஜாதியிலேயிறே பிறந்தது! அங்ஙனொத்தார்க்கு சரணாகதியோட்டையது தெரியாதிறே என்கிறான். *வாநரோத்தம* என்றவன், ஹரி! ஹரி! என்கிறான் தானே யிறே; 'ப்லவங்கம' என்கிறான், ராஜாக்களுமாய் மூலையடியே நடக்கவுரியருமாயிருக்கிற பெருமாளும் எங்கள்முன் இத்தனை கோபித்தறியார்; நீ வாநரஜாதியாயிருந்துவைத்து இங்ஙன் கோபிக்கக்கடவையோ? *கார்யம் கருணமார்யேண* - இவர்கள் புண்யபாபங்கிடக்க; இப்போது ஓடுகிற தசையைப்பாராய். உன் கையிலே யகப்பட்டு "நாம் என்படக்கடவோம்" என்று நடுங்குகிறபடியாராய். இவர்களுக்கு வேறுரக்ஷகரில்லையே. இப்போது இவ்வளவில் நாம்இரங்கவேணுங்காண்! *ஆர்யேண* - இவையெல்லாம் இப்போது நான் கற்பிக்க வேண்டும்படியாவதே உனக்கு! *ஆர்யேண*-ஐந்த்ரவ்யாகரணபண்டிதனென்கிறது பொய்யோ? அவையுமெல்லாம் கற்றுக்கேட்டிருக்கச்செய்தேயும், இப்போது ராமகோஷ்டியில் பரிசயம் பின்னாட்டினபடியாகாதே. அக்கோஷ்டியிற்பழக்கமிறே நீ இங்ஙன்சொல்லவல்லையாயிற்று. நான்போந்தபின்பு அக்கோஷ்டி இங்ஙனேநேர்ந்ததாகாதேயென்றுகருத்து.*நகச்சிந்நாபராத்யதி* ஸம்ஸாரத்தில் குற்றமில்லாதார்ஆர்! திரைநீக்கிக் கடலாடப்போமோ? நற்குதிரையாகப்பாவித்திருக்கிற பெருமாள்தான் குற்றவாளரல்லரோ! நான்தான் குற்றவாட்டியல்லேனோ? நீதான் குற்றவாளனல்லையோ? பெருமாள் குற்றவாளரானபடி யெங்ஙனே? என்னில்,-தாம்காடேறப் போந்தார்; அவர்பின்னே மடஊருவாரைப்போலே இளையபெருமாளும் போந்தார்; தம்மோடே ஏகாந்தபோகம் பண்ணக் கடவதாக இலையகலப்படுத்துக்கொண்டு நானும்போந்தேன்; என்னைப்பிரிந்து பத்துமாஸம் இருந்தார்; தாம் வாராவிட்டால் தம்மதோரம்பு இசங்க மாட்டாமையில்லையிறே இவ்வழி; இத்தனைநாள் பிரிந்திருக்க வல்லரானபோதே பெருமாள் பக்கலிலேயன்றோ குற்றம்? பாரதந்த்ர்யத்துக்கு அநுகுணமாகப்பேசாதிராதே, அதுதன்னைச் சொன்ன என்பக்கலதன்றோ குற்றம். இனி, நாயகன் சொன்னகார்யம் செய்த அடியாரைத் தண்டிக்கப்பார்த்தவன்று, பெருமானருளிச்செய்த கார்யம் செய்யப்போந்தவுன்னை முற்படத் தண்டித்துக்கொண்டன்றோ ராவணன் சொன்னகார்யஞ்செய்த இவர்களைத் தண்டிப்பது? ஆகையால், நீயல்லவோ குற்றவாளன்! "எல்லாப்படியாலும் பெருமாள் ஒருவிஷயத்தை முனிந்தவன்று ஆறவிடுகைக்கு நானுண்டு; நானும் அவர்வழி போகவேண்டி இருந்த வன்றைக்கு நீயுண்டு" என்றிருந்தேன்; நீயும்இங்ஙனேயானால் அபராதஞ்செய்தார்க்குப்புகு வாசல் உண்டோ? என்கிறாள்.

**அடிக்கீழமர்ந்துபுகுந்து அடியீர்வாழ்மினென்றென்றருள்கொடுக்கும்***
**படிக்கேழில்லாப்பெருமானைப் பழனக்குருகூர்ச்சடகோபன்***
**முடிப்பான்சொன்னவாயிரத்துத் திருவேங்கடத்துக்கிவைபத்தும்***
**பிடித்தார்பிடித்தார்வீற்றிருந்து பெரியவானுள்நிலாவுவரே. (11)**

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார் எல்லாரும் திருநாட்டிலேசென்று அடிமையிலே மூர்த்தாபிஷிக்தராயிருந்து என்றும் அடிமை செய்யப்பெறுவர்என்கிறார். [அடிக்கீழ் என்று தொடங்கி]- 'தன்திருவடிக்கீழே அநந்யப்ரயோஜநராய்ப் புகுந்து அடியாருள்ளார் வாழுங்கோள்' என்னும்படிக்கு ஒப்பில்லாதானாய் இருந்துள்ள ஸர்வேச்வரனை ஸம்ருத்தமான பழனங்களையுடைய திருநகரியிலே ஆழ்வார். [முடிப்பானென்றுதொடங்கி]-ஆயிரந்திருவாய்மொழியிலும் தம்முடையது:க்கநிவ்ருத்பர்த்

நமாகத் திருமலையிலே சொன்ன இத்திருவாய்மொழிபற்றினரெல்லாம் திருநாட்டிலேபோய் அவ்விடம் தாங்களிட்ட வழக்காய்க்கொண்டிருந்து என்றும் செலுத்தப்பெறுவர் கற்றவர்களை ஸமாச்ரயித்தவர்கள் என்றுமாம்.

**இ.**—நிகமத்தில், இத்திருவாய்மொழிகற்றார் பரமபதத்திலேசென்று தாஸ்யரஸத்திலே அபிஷிக்தராய் அடிமைசெய்யப்பெறுவர்க ளென்கிறார். [அடிக்கீழ் இத்யாதி] - தன் திருவடிகளின் கீழே அநந்யப்ரயோஜநராய்ப் புகுந்து ஸ்வரூபஜ்ஞாநமுடையார் வாழுங்கோளென்று முத்ரையால் அருளிச்செய்கிறப்போலேயாயிற்று நின்றருளுவது. ''மாமேகம் சரணம்வ்ரஜ - மாசுச:'' என்றாப்போலேயாயிற்றுநிற்பது. [படிக்கேழில்லாப் பெருமானை] - இப்படிக்குத் தனக்கு ஒப்பில்லாத ஸர்வேச்வரனை. [பழனக்குருகூர்] - அழகிய நீர்நிலங்களையுடைய திருநகரி. தம்முடைய விரோதியை முடிக்கைக்காகத் திருமலையைக்குறித்து அருளிச்செய்த இப்பத்தும். [பிடித்தார் பிடித்தார்] - பற்றினார் பற்றினார் என்னுதல். பற்றினாரைப் பற்றினார் என்னுதல். பரமபதத்திலே குறைவற்ற அடிமை செய்யப்பெறுவர். இவர் பண்ணின ப்ரபத்தியாக பரமபதத்தேறப்போவர்கள்.

**ஈடு.**—நிகமத்தில் - இத்திருவாய்மொழிகற்றார், பரமபதத்திலே சென்று தாஸ்யத்திலே அபிஷிக்தராய் அடிமைசெய்யப் பெறுவர்க ளென்கிறார்.

[அடிக்கீழ்இத்யாதி] - உங்கள்உத்தேச்யங் கண்டிகோளே, இத்தைப்பற்றி வாழ்ந்து க்ருதக்ருத்யராய்ப் போங்கோ ளென்று. [அருள்கொடுக்கும் படிக்கேழில்லாப்பெருமானை] - ஆச்ரிதவிஷயத்தில் அருள்கொடுக்கும் ஸ்வபாவத்துக்கு ஒப்பில்லாத ஸர்வேச்வரனை. *மாசுச:* என்ற க்ருஷ்ணனும் ஒவ்வான் இவன்படிக்கு. [பழனக் குருகூர்ச் சடகோபன்] - நல்ல நீர்நிலங்களையுடைய திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார். [முடிப்பான்சொன்ன இத்யாதி] - ''பல நீ காட்டிப் படுப்பாயோ'' என்கிற ஸம்ஸாரவிரோதத்தை முடிக்கையிலே திருவுள்ளத்தாலே உத்ஸாஹித்தருளிச்செய்த ஆயிரத்திலும் வைத்துக்கொண்டு இப்பத்தும் திருமலைக்குச் சொல்லிற்றின. *ரத்நஹாரீச பார்த்திவ:* என்கிறபடியே. [பிடித்தார் பிடித்தார்] - பிடித்தவர்களைப் பிடித்தவர்கள்; பற்றினாரைப்பற்றினார். [வீற்றிருந்து] - *ஸ ஸ்வராட்பவதி* என்கிறபடியே இருவர்க்கும் ஒக்குமாகாதேவீற்றிருக்கை. ஸ்வவ்யதிரிக்தங்களையும் சேஷமாகவுடையனாகையால் வந்த ஆனந்தத்தையுடையனாயிருக்கும் அவன்: *ஏஷஹ்யேவாநந்தயாதி* என்கிறபடியே அவன் ஆநந்திப்பிக்கஆநந்தியாயிருக்கும்இவன். [பெரியவானுள் நிலாவுவரே] - *மஹாகம்* என்றும், *பரமாகாசம்* என்றுஞ் சொல்லப்படுகிற பரமபதத்திலே வர்த்திக்கப்பெறுவர்கள். இத்ராதிகள் வர்த்திக்கும் இவ்வருகில் வெளியிலல்ல. மேல்வரும் அநுபவமொழிய ப்ராப்திக்கு ப்ரபத்தி பண்ணவேண்டாத தேசத்திலே போய்ப் புகப்பெறுவர். இவர் பண்ணின ப்ரபத்தியே நமக்குமெல்லாம்: தனித்து வேண்டா; இப்பாசுரத்தைச்சொல்லி ப்பலத்திலே அந்வயிக்கும் அத்தனை. நற்கன்றுக்கிரங்கினது தோல்கன்றுக்கு இரங்குமாபோலே, இவரை நினைத்து இப்பத்துங்கற்றார்பக்கலிலும் ஈச்வரன் ப்ரஸந்நனும். ஸ்ரீவிபீஷணாழ்வானோடு வந்த நால்வர்க்கும் அவன்பண்ணின ப்ரபத்தியே யமைந்ததிறே. ''இவனுடையவன்'' என்று எதிர்த்தலைக்குத் தோற்றவிருக்கும் அத்தனையே வேண்டுவது.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



ஆறும் பத்து முற்றிற்று

மணவாளமாமுனிகளருளிச்செய்த

# திருவாய்மொழி நூற்றந்தாதி

வைகல் திருவண்வண்டூர் வைகுமிராமனுக்கு* என்
செய்கைதனைப்புள்ளினங்காள் செப்புமென*—கைகழிந்த
காதலுடன் தூதுவிடும் காரிமாறன்கழலே*
போதினியீர் நீர்வணங்குமின். 51

மின்னிடையார்சேர்கண்ணன் மெத்தெனவந்தானென்று*
தன்னிலைபோய்ப்பெண்ணிலையாய்த் தான்தள்ளி*—உன்னுடனே
கூடேனென்றூடும் குருகையர்கோன்தாள்தொழவே*
நாடோறும் நெஞ்சமே நல்கு. 52

நல்லவலத்தால் நம்மைச்சேர்த்தோன் முன்கண்ணுறை*
வெல்லும்விருத்தவிபூதியனென்று* எல்லையறத்
தானிருந்துவாழ்த்தும் தமிழ்மாறன்சொல்வல்லார்*
வானவர்க்கு வாய்த்தகுரவர். 53

குரவைமுதலாம் கண்ணன்கோலச்செயல்கள்*
இரவுபகலென்னுமலென்றும்*—பரவுமனம்
பெற்றேனென்னோகளைந்துப் பேசும்பராங்குசன்தன்*
சொல்தேனில் நெஞ்சே துவள். 54

துவளறுசீர்மால்திறத்துத் தொன்னலத்தால்* நாளும்
துவளறுதன்சீலமெல்லாம் சொன்னான்*—துவளறவே
முன்னமனுபவத்தில் மூழ்கினின்றமாறன்* அதின்
மன்னுமுவப்பால் வந்தமால். 55

மாலுடனேதான்கலந்து வாழப்பெறுமையால்*
சாலநைந்துதன்னுடைமை தானடையக்—கோலியே*
தானிகழவேண்டாமல் தன்னைவிடல்சொல்மாறன்*
ஊனமறுசீர் நெஞ்சேயுண். 56

உண்ணுஞ்சோறாதி ஒருமூன்றுமெம்பெருமான்*
கண்ணனென்றேநீர்மல்கிக் கண்ணிணைகள்*—மண்ணுலகில்
மன்னுதிருக்கோளூரில் மாயன்பால்போம்மாறன்*
பொன்னடியே நந்தமக்குப்பொன். 57

பொன்னுலகுபூமியெல்லாம் புள்ளினங்கட்கேவழங்கி*
என்னிடரை மாலுக்கியம்புமென—*மன்னுதிரு
நாடுமுதல் தூதுவிடும்மாறனையே*
நீடுலகீர் போய்வணங்குநீர். 58

நீராகிக்கேட்டவர்கள் நெஞ்சழிய* மாலுக்கும்
ஏரார்விசும்பி விருப்பரிதா*—ஆராத
காதலுடன்கூப்பிட்ட காரிமாறன்சொல்லை*
ஓதிடவே யுய்யுமுலகு. 59

*உலகுய்யமால்நின்ற உயர்வேங்கடத்தே*
அலர்மகளைமுன்னிட்டவன்தன்—மலரடியே*
வன்சரணாய்ச்சேர்ந்த மகிழ்மாறன்தாளிணையே*
உன்சரணாய் நெஞ்சமேயுள். 60